## மார்க்கத்தில் கண்டகனி என்ற வர்ணமெட்டு.

இராகம் அடாணா தாளம் ரூபகம்,

கண்ணிகள்

1

ஆரடா நரனேயிவ் வழிவந்தாய் நீயெனக்
காகார மாவதற்காய் நேரடா கேள
நேரடா கேளெந்தன் நெஞ்சம் மகிழ்வாக
நினைத்தின்றுப் பசிதணிவேன்

2

ஆண்டே யென்னைத்தின்ன லாகாது ஐயையுன்
அடிமலர் களில்விழுவேன் தேண்டுளபம்
தேண்டுள பம்பூண்ட திருமாலை தரிசிக்க
தேவனே நான்செல்பவன்.

3

மானிடப் புழுவேயிம் மிரட்டென்பால் செல்லுமோ
மறுத்துன்னை விடுவதுண்டோ தேனடையை
தேனடை யைப்போலப் பிழிந்துந்தன் தேஹத்தை
தின்றெந்தன் பசியைத் தீர்ப்பேன்.

4

நானுனக் கெதிரியோ நல்லன்ப னேயுந்தன்
நளினப் பதம்பணிந்தேன் தீனன்மீதில்
தீனன் மீதில தயை கூர்ந்தனுப் பும்ஐயா
திருமாலின் சேவை செய்ய.

5

திருமால் திருமாலென்னும் திருட்டுப்பா வையும்சொல்லும்
திண்ணமாய் நானேற்றிடேன் பொரிமாவைப்போல்
பொரிமாவைப் போலுன்னைப் பொடித்துண்டை செய்துண்டு
போக்குவே னென்பசியை.

6

என்ஜீவ பயத்தினால் இயம்பும் வார்த்தைகளல்ல
ஏமாற்றும் செய்கையல்ல தன்றுளபன்
தன்றுள பன்றிருத் தாட்பணிந் தடியவன்
தவறாதுன் னிடம்வருவேன்.

7

மானிடர் வாக்காலென் மதிமயங் கேனென்னை
மடையனென் றெண்ணினையோ நானுடனே
நானுட னேயுன்னைத் தினமெறந்தன் பசிபோக்க
நற்றரு ணம்யிது வே.

8

சத்தியம் தவறிடேன் சாற்றேன்பொய் வாச்கைநான்
சாவ வயாபியாகிய அத்தனடாத
அத்தன பாதத்தாணை றறிவை சேவித்திங்கு
அவைக்ஷணத் திலவரு வேன்,

9

விஷ்ணுவைக் கள்ளனாய் விரித்துரைக்கும சேதி
விண்மணனும அறியுமடா உஷ்ணமாக
உஷ்ணமாக வெருந்தன உள்முனி யசமசயமேல
உன்னைநான் விடுவதில் லை

10

ஏகேலென் றென்னைநீ ஏங்கச்செய் திடவேண்டாம்
என்வார்த்தை யொன்றைக்கேட்பாய் ஏகாதசி
ஏகாதசி வாத சாக்ஷியாய் வருகின்றேன்
என்னைநீ ரனுப்பும ஐயா.

11

இவ்விதம் பாடுவான் ஏகா தசிசாக்ஷி
இட்டதின் பொருளுணர அவலமயம்
அவலமயம் ப்ரமம ராககதன் வினவுவான
அவன்பேரூர் வாதபல னும்.

---

விருத்தம்.

ஆவலாய் நம்பியோங்கும் ஆலய மேகவென்னும்
கேவல மானிடாநான் கேட்பதற் கிசைந்தீயும்
மேவிடு மூரும்பேரும் மேலெனு மேகாதசியின
பாவம் நானறியசீராயப் பரிவுட னறைகுவாயே

விருத்தம்.

அரக்கனு லறையக்கேட்ட அடியவன் மனத்தனென்றும்
வரிக்கும்நன் பக்தியோங்கி வளர்வதின் வண்மையாலே
உருக்கமாய் நம்பியைத்தன் உள்ளத்தில் துதித்துமேயங்
கிருக்கும்போல் லாங்ககற்ற இன்சொலா வியம்புவானே.

இராகம் மோஹனம் தாளம் ஆதி.

நொண்டிச் சிந்து.

ஆண்டோன் சொல்லக்கேளும்—ஆற்றல்மலிந்த—அரக்கசிரோமணி அன்புடனே, கரியமாலுந்தியந்தோன்—படைப்பில்—காசினியிலுயர் திருக்குறுங்குடிவாழ், உரகசயனனழகு—நம்பியின்—உபயசரணமென்தன் சிர் மணிந்து, பரிவுடன் நான்புகலும்-வாக்கை-பக்ஷமதாய்க் கேட்டுநல்ல பலன் பெறுவாய், இருவினைப் பிணியறுக்கும—ஈசன்பதம்—இகபரஸாதக மீந்திடுமே. ஆ.

ஜெம்புக பாஷாணம்-என்னும்பறச்-சேரிதனிலுதித்தேன்ஜா தியில்பறையன், அம்புதி சயனன்தாள்-அநுதினமும்-அன்புடனேபோற்றுமிந்த அடியேனை, நாம்பாடுவானென்று-இந்த-நாட்டில்பல ருரைப்பதைக் கேட்டிருக்கின்றேன், வாட்டமுறும் பவரோகம்-வில்கிவுய்ய-வையமிசை தீர்த்தயாத்திரை சென்றுமேவந்தேன். ஆ.

ஏகாதசிபலனை—எழைப்பறையன்—எடுத்துரைத்திடவெந்தன் தரமாமோ, நாகேந்திரனை-ஆதிசேடன்-நாவுகளீராயிரமும் பெற்றிருந்தாலும், ஆஹாவென் றாச்சரியப்—படுவானன்றி—அறிந்துரைத்திடஅவ னுக்குமரிதாம், சோகாந்த கீரம்யென்னும்-மனத்தினிருள்-சொல்லாமலகன்றருள் ஜோதி விளங்கும். ஆ.

தசமியி லொருவேளை-புக்தம்-தானெடுத்தேகாதசி ராப்பகலும், பசியதை யெண்ணாமல்-ஜல-பானமும் செய்யாமலுப வாஸமதாய், குசுமநாபன்குணாலங்-கீர்த்தனங்கள்—குறைவின்றியேசெய்து மறுதினத்தில், அசனமுட்கொள்வதுதான்-பாரணை-அதிகாலையிலொரு வேளைதானையா. ஆ.

பாரணை முடிந்தபின்பு—வ்ரதமிழைப்போர்—படுத்துறக்கம்கொண்டால் பலனழியும், நாரணன் பதத்தில்மனம்—நாடிப்போற்ற—நான்குவகைமுக்தி பெற்று நமனைவெல்வார், கோரபா தகங்களென்னும்-கொலைபுலை-கொடியகளவும்பஞ்ச பாதகங்களும், நீறாயெறிந்துபோகும்—ஹரிக்ருபையால்—நித்யானந்தம்முண்டாகும் நிகமவாக்காம். ஆ.

## இராகம் புன்னாகவராளி தாளம் சாப்பு.

### கப்பல்.

ஏலேலோ சுந்தர பரிபூரணனே கோவிந்தா
ஏகரூபமாய வியாபகனே
வேலைதுயில் மாதவனே கோவிந்தா
வெங்குயபாதீத தாமபவனே
நீலமேக ஸ்யாமளனே கோவிந்தா
நிலமும் விண்ணை யளந்தவனே
பாவனம்செய பாதருவனே அடிமையுந்தன
பாதமதை நம்பினனே.

### முடுகு.

1 என்றுசுந்தரபரி பூர்ணேசனைததான்—ஏகாந்தமாயுள்ளி லேத்தித்துதித்து, அன்றலர்ந்திட்டசெந் தாமரைநிகாதது—அன்பானபக்திரஸம் அகத்துள நிறைந்து, என்றுமேகுறையாமல மென்மேலுமலிந்து—எழிலாகவே யிலகும் இனியமுகமலாவால், தன்மரணத்திறகஞ்சுவும தயங்காமல மகிழ் வாய்—தன்னையப்ரம்மராக் கதனநம்புதற்கு, பனமுறை ஸ்ரீநம்பியின பாதமபஜித்து—பதினான்குசபதங்கள செயருவான்பரிவாய், ஆண்டவனே யென்வாக்கை அன்புடன்கேளும்—அழகநம்பியின பாத மலாசாக்ஷியாக, வேணடுநல்லுறுதிவாக் குகள்சதயமாயும்—வெறுபபின்றிமனமகிழ் வாகப புகலவேன், பாண்டவசகாயஸ்ரீ அழகநம்பியினசீா—பாதமலா தரிசித்து அதிவேகமாய்நான், ஆண்டவனேவநதெய்தி உனபசிகெகநதன—ஆணை யைததாநிடத தவறுவேனாகில, நீண்டகடலேழால வளைநத்தாநருவிந்த—நிலமிசையுள்ளோர்க்கு ஆகமங்களிலே, மூாசொலிபபோலுள்ளதிடும் பாபமேற்க—முழுமனதாய்நானுடன பட்டுநாசனடவேன

ஒவ்வொரு விதப்பாப செயல்களையு மொவ்வனுள
ஓங்கும்ஸ்ரீ நம்பியின் பாதசா க்ஷியதாய
செவவையாய் விவரித்து செப்புவே னென்று
ஜெகதீச னடிபோற்றி செங்கைகுவித் தானே. ஏ.

2 சர்வகாரணமாக வோங்கும்சத்யததின—சாபதனைவிட்டவனுக் குள்ளாகாகடைவேன், (1) துர்விஷயகாமமோ றாவேசம்பூணடு—துஷட னைப்பாதார கமனம்செய்வோாகள், சாவகாலததுலகில் வசைவாகனை யேற்று—சார்ந்திடும்பொல்லாத நரகத்தையடைவேன். (2) பேருலகில் சமபந்தி போஜனத்தன்னில்—பெருமையாய்தனக்கொன்றும் மற்றவர்க்

கொன்றும், கோபிலாவிதமாக செய்வித்துண்போர்க்கு—நேரிடும்பாபுரா கத்தையுமதுடைவேன் (3) மறையோர்க்குவிதிபோல புவிதானமீந்து— மறுபடியும் கவர்வோர்க ளெய்தும்நரகடைவேன், (4) சுந்தரமிருந்தவொரு கன்னிமைமணந்து—சாதங்களனுபவித் தவளைவெறுத்து, இந்தமன்னு லகதநில நிந்தையாக்கறைவோர்—எய்திடும்நரகத்தை நானடைந்துழல்வேன், (5) அமாவாசையாம்புண்ய பிதாதினங்களிலே—ஆகமம்போலவே பிதுர் காமம்செய்தும், அரியதாகியஸார்த்த போஜனமசெய்தும்—அன்றிரவில் மகிழ்வாக வேயன்னமுண்டும், அரிவைஸம்போஹத்தைச் செயவோரக ளோற்கும—அதிகொடியதானநர கஙகளையுமடைவேன், (6) தரணியில் தன்மகளை யொருவனுக்கன்பாய்த—தானுறுதியாய்க்கன்னி காதானம்செ ய்து, தருவதாய்ச்சொல்லிபின் இல்லையென்றறையும்—தர்மஹீனர்களுக் குரியநரக டைவேன், (7) ஷஷ்டியஷ்டமியமா வாசைதினத்தும்—சதுர்த் தசித்துவாதசி யானநாட்களிலும், சிஷ்டவாச்சாரப் படிக்குளிக்காமல்— சித்தமகிழ்ந்துண்போருக் குற்றநரகடைவேன், (8) பெருத்த காமாந்தகா ரததின்வசமாகி—பேருதவிசெய்தோன் மணந்தமனைவியையும், உரித்த மித்திரனுடைய மனைவியையும்புணரும்—உன்மத்தர்கள்படும் நரகஙகள டைவேன், (9) அவனியில்எவனொருவன் குருபத்னிதனையும்—அகிலத் தையரசாளும் வேந்தன்ராணியையும், அச்சமிலலாமல்தன் ஹஸ்தத்தால் தொட்டோன்—அடைந்துழலுமமாண்கொடிய நரகங்களடைவேன், (10) ஆதியிலொருவனுக் கொருவஸ்துவைததான்—அளிப்பதாய்வாககுறுதி செய் துபின்னீயா, அருமபாவியெனுமபேரை யேற்றுமேதிரியும்—அறிவிலார் கள்சாரும் நரகத்தையடைவேன், (11) மேதினியிலொருவனிரு பெண் களைமணந்து—மேன்மையாயொருவளை நேசிததுமேதான், ஆதரவிலா மல்மற் றவளைவிலக்கும்—அதிதுஷ்டனுக்குரிய நரகததையடைவேன், (12) அதிகொடியப்ரம்மஹத யாதிபாதகமும—அக்கிரமத்துக்குரிய மது பானம்செயதும், அன்னியர்கள்பொருளை அபஹரணமசெயதும்—ஆச் சாரயதூஷணம் செய்துவருவோனும, இங்ஙனிதனிலிவா களுக்குதவி யாக—இருப்போரகளும் மெய்தும் நரகஙகளடைவேன், (13) இப்பெரிய பாபஙக ளுக்கும்மேலான—இயம்பொணாமாபாவம இனியொன்றுகேட் பாய, இப்புவியிலமறையாதி கலைகளிலியமபும்—இனியகீர்வாணத்திலே யொருசுலோகம்.

செப்பமாய்ச் சொல்லியத னுக்குரிய பொருளும்
செப்புவே னென்றுநம் பாடுவான் சீராய்
முப்புர மெறித்தோனும் முளரியோ னேற்றும்
முதல்வனடி யைப்போற்றி மொழியமுயன் றனும். ௭.

ச்லோகம்.

நாராயண மதாங்ரியேஸ்து தேவைஸ்துல்யம் கரோதியஹ
தஸ்யபாபே நலிப்யேயம் யதயஹமநா கமேபுனஹ.

இதன்பொருள்.

3. இவ்வரியஸ்லோகத்தி னுக்குரியபொருளை—இச்சமயமுந்தனுக் கியம்பு வேன்கேளாய், செவ்வையாகச்செவி கொடுத்துளனுவந்து—செப்புவதைக் கவனமாய்க் கேளென்றுரைப்பான், சாவஸ்மாத்பரனும் சாவாந்தர்யாமி —யாய்சர்வகர்மசமா ராதயாயனுமி, முனிவர்களாதிமு மூக்ஷாக்களுந் தம்—முள்ளத்திலெப்போதும் செயுமுபாஸ்யனுமாய், சாக்ஷாதமோக்ஷப் பிரதனுகிவேதங்கள்—சாற்றிப்புகழ்முகத ப்ராப்யனும்ஆகி, பார்விணனும் பூதாள மென்பதையுமசார்ந்த—பதினான்குபுவனத்தை யுந்தன்வயிற்றில், நேர்மையாய்வைத்துகாப் பாற்றிடும்ஸ்ரீமந்—நாராயணன்அனை தேவனுக் கிணையாய், சார்வகாலமும்கர்ம வாஸனைபாராய்—சாகரமசூழுலகில் மறு தெய்வங்களையிப், பாரமிசையிலறியாமல பூஜிக்கிறாபங்கி—பண்ணியேமிக் யசம் ஸாரியாயுலகில், சீரவழியை நாமாக விட்டிழுன்றலையும்—சிற்றறிவு ளோர்களுக் குற்றநாகடைவேன, இந்தவிதமாகயீரேழுசத்தியமும்—ஈசன் பாதத்தாணை இயம்பினேனுன்பால்.

எந்தன்பால் க்ருபைகூர்ந் தனுப்பினால் வேகம்
ஏகிநம் பியின்பாத மேதநித்த தகித்தது
உந்தன்பசி தீர்க்கவே உடனேயிங் குற்றென்
னலையளிப் பேனென்று உறுதிசொன்னானும் எ.

விருத்தம்.

அடியவ னுரையைக்கேட்டு அரக்கனுள் ளன்புகூர்ந்து
துடியதாய்ச் சென்றுநீயுன் துளபமால் பாதம்போற்றி
கொடியதில் வருவாயுந்தன் நோன்பதை வீணாக்காமல்
மடியநீ பயந்தொழிந்ததால் மண்ணிலநா னுனைவிடேனே.

விருத்தம்.

அரக்கனால் விடைபெற்று அகமிக மகிழ்ந்துபக்தன்
உருக்கமாய் ஹரியைப்போற்றி உடையவா ஆழ்வாயென்று
சிரக்கர மேற்றிக்கூவி ஸ்ரீதரா அபயமென்று
கருகின மரம்போல்வீழ்ந்து நாதனைப் பணிந்திட்டானே

## விருத்தம்.

அகமதில் மகிழ்வுற்றோங்கி அதிவிரை வாய்நடந்து
செகமிசைப் பாடுவோனாய்ச் செப்புமஸ்ரீ ஹரிபக்தன்செல்
புகழ்மிகும் குறுங்குடியென்னும் புண்யக்ஷேத்திரத்தின்மாக்ஷி
சுகமதாய தம்பிரானந்த சுருக்கமாய்ப் புகலுவேனே.

சுவாமியா படர்ந்திருக்கும் என்ற வர்ணமெட்டு.

இராகம்—புன்னாகவராளி.

## நோண்டிச் சிந்து

1 திருக்குறுங் குடிச்சிறப்பை—மிகத—தித்திக்குந்தமிழிலோர் சிந்து ரைப்பேன், அருக்கனும் சோமனுடன்—வழு—ஆழிகள்சூழ்ந்துள்ள வையகத்தில், சிறக்கும்தென் பாண்டிநாட்—டில்வளம்—சேர்திருநெல்வேலி ஜில்லாப்புகழ், வராகக்ஷேத்—திரத்தின்சிறப்பினை—வழுத்துவேனொரு விதம் வண்மையாக், பதினெண்புராணங்களில்—ஒன்றாய்—பகரும் வராஹபுராணத்தினில், நிதியாய் விளங்குமிப்—பதியே—திகழ்த்தும் ஸௌகரவக்ஷேத்திரமென்றும்நல், துதிசேர் வாமனக்ஷேத்—ரம்மனத்—துன்பமகற்றும் குறுங்குடியாம், அதிகப்புகழ்மலி—தக்ஷிண—பதிரிகாஸ்ரமந்திருக் குறுங்குடியாம், இந்தவிதப்பெயர்கள்—பெருமை—இனிதாயப் பெற்றோங்கிடும்கோபுரசிகரை, எந்தைஸ்ரீ—அழகியநம்பியின—எழிலகழல் களைத்துதித்த நியமபிமேவன் தி.

2. மாஹேந்த்ர வெற்பிலுத்—பவித்தநதி—மாக்ஷிசேர்சிந்துநதிக்கரையில், ஆஹாஹா—அத்புதக்ஷேத்ரமென்—றகிலத்தோரெல்லாம் புகழ்வாயந்து தேறியென்றேத்திடும்—மாந்தர்க்குத—தேவையானவரம் ஈந்துகாக்கும் ஆதிசயனனாம்—யோகநம்ஸ்ரீ—அழகியநம்பியின கருணையினால், பாலாழியையகர்த—தப்பல—பணைபுஷ்கரிணிகளினபெருக்கால், காலினைவழிபெரு—குமஜலம—கணக்கில்அடங்காத நஞ்சைகளில, மேலாகப் பாய்வதினால்—செந்நெல—மென்மேலுமோங்கி வளர்வயல்கள். நாலாபக் கத்திலுமே—சூழ்ந்து—நலமாகவிளங்குமயிந் நகரத்திலே, நறுமணம கமழும் பற்—பல, வித—நந்தவனங்கள்பூஞ் சோலைகளும, சிறப்பாய வாழைத்தாவி—யோங்கிய—சிறந்தநற்கமுகுமதென் னஞ்சோலையும, பெருமைசேர் மாபிலா—வாழைகள்—பெருகியுயர்ந்தடர் சோலைகளும், அறியாள ராகிய—நாவலர—அறைவதற்கேற்பச்செழித்தோங்கியும, விண்ணை யளாவி—வுயர்ந்துள்ள—விசித்ரகோபுரம் ஸ்தூபியுடன, பண்ணில புகழ்ந்துரைக்—கப்பெற்ற—பண்புள்ளதாம்திரு ஆலயத்தில், மண்ணுடன் விண்ணளந்—ததிரு—மாலாகிய ஸ்ரீமந் நாராயணன், கண்ணும் கருத்தும்—மகிழ்வெய்தக்—காக்ஷியளித்தடி

யானைகாத்தும, நின்றோருகும நம்பியாயும—தேவன்—நீள்மையாய்வீற்றிருக்குமநம்பியாய், நன்றாக சேஷன்மீதிற்—றுயில்—நாதன் பள்ளிகொண்ட நம்பியாயும், அன்றாடம அன்னதானம்—மாந்தாக்—களிக்குமதிருப்பாற் கடல்நம்பியாய், மனமூடி வரமகோரும—அடியார்க்கு—மகிழ்ச்சியாயருள்செயயும மலைநம்பியாய, இந்தவிதமைந்து—வடிவாக—இந்திரேசன் அழகநம்பியென்னும், சுந்தர பரிபூரணேசன்—ஒருகி—சுபகரம்அன்பநகரிந்துககாகரும, எந்தையின பேரரு—ளாலசமபத—தேராளமாகப் பெருகிவாழும, விந்தைசேர குருகை—மடத்தினில்—விளங்கும்ஸ்ரீபேரருளாளனேனும, ராமாநு ஜஜீயர்—பாலகிருபை—ராஜீவாக்ஷன்நம்பிச் செய்தோங்கியும், க்ஷேமாதி சுகபோகங—கன்தன்னை—சேவிக்கும்பக்தருக் கீந்தும் திவய, நாமாதி யால்கானம்—செய்நேற்றும்—நலலன்பாக்குரியதெல் லாமளிதரும், ப்ரேமாதி யால்நிறைந்—ததேவன்—பேரனபால்வனசசிறப்பொன் முறைப்பேன், இ.

நந்தவனச் சிறப்பு.

இராகம் நாதநாமக்கிரியை தாளம் ஆதி.

நந்தா வனம்மிகவும் அந்தம்—நாடிப்பார்த்தால னந்தம் விளைக்கும் மதின் கந்தம், மந்தாரைக்கொன்றை-நந்தியா வட்டம்முதலான மாக்ஷிமையென்சொல்வேன், சந்தோஷம் மேவும்அதின் சநதம்-சநததமுள மகிழும், இந்திராப் பெற்றதாகவு யாநத-இணையறற தருவடர்நத ந.

முடுகு.

வாரிஜமுகிகள் சேர்ந்துகளிக்கும்—வனஜங்கள்மலிந்தஸ ரோவரம் பலதிலும், நீராம்பல்செவ வல்லிதாமரை—நீலோத்பலசெங் கழுநீராகப், போபதிணுயிரம் பெற்றுளமலர்களின்—பெருமையைப்புகலவோர் நாவாலாமோ, முலலைமல்லிகை மெல்லியஜாதியு—முள்ளமகிழ்நதிடும் நல்லஷண்பகம, சொல்லுவேனபாதிரி ரோஜாபலதும்—சோகமகற்றும்சூ ரியகாநதிகளும, அருமையாயப்பெருகிய மருருதவனமும்—அழகியதாழைப் புகழ்சாமந்தியும், மரிமிகமகிழும கதிருபசசையும—மாசூரிசேர்வெட்டிவி லாமிச்சஙகளும், அஷடாக்ஷரனுக் கானதுளசியும—அரவணிபரமனுக் குரியபிலவமும, கஷடஙகளகறறும சோகவிருக்ஷமும்—கதிரவடிவேலவ னுகிய வேஙகையும, கெட்டியானதேகரு 'வீட்டிபலாவும்—கெம்பீரம்மிகும மாபலதினுசும், எட்டிவானதநை முட்டும்மூஙகிலும்—எழிலாய்வழாநதள பாகருதென்னையும, இட்டமதாகிய வாழைகள்பலதும்—இணையிலாகிச்சிலி நாரத்தைகொய்யா, பட்டுபோல்புஷ்பப் பாதிரிபுன்னையும்—பண்புசேர்

பொம்பிடி மாஸாரஞ்சியும், எட்டிபரிக்குமா துளேபலஜாதியும்—எண்ணிலடங்கா தருவகையோககியும், சட்டமதாகிய மயில்குயில்கிளிகளும்—சடுதியிலேகும்கௌதாரிகாடைகளும், வட்டமிட்டுவரும் வன்கெருடன்களும்—வயிற்றில்குட்டியைகட்டும் வானரயினங்களும்,

மட்டிலடங்கா மஹிமைகள் வாய்ந்த
மலர்வனத்தின்மிக மாக்ஷிமை யைவெகு
திட்டம தாயுரைத் திட்டவெங்கடராயன்
தீந்தமிழ் சிறப்பினுல் தீர்க்கமாயோங்கும். ரு.



விருத்தம்.

இவவித மாக்ஷிவாய்ந்த இலகுமதென் குறுங்கைதன்னில்
செவவையா யமர்ந்துமேதன் சேவடி பஜிப்போருக்கு
இவவுல கினிலிஷ்டார்த்தம ஈந்துள நம்பியின்றுன்
பவயமா யேற்றிப்போற்றிப் பாடுவான் புகழுவானே.

எந்நேரமுமுந்தன்சந்நிதிதன்னிலே என்ற வர்ணமெட்டு,

இராகம் ஆரபி தாளம் ஆதி.

பல்லவி.

வரலாமோ நானுந்தன் வண்மைசேர் சந்நிதிக்கு
வனஜ நாபனே மெய்யனே.

அநு பல்லவி.

விரலால் மலையெடுத்து விண்ணேசன் மதமழித்த
காலாக வம்படைத்த கமலத ளாக்ஷனே, வ.

சரணம்.

அகில மானந்தபாதா அத்புத ஞானபோதா
ஆரணங் களுக கதீதா
புகலுவ தற்கொணுத புஷ்கரத் தாள்விநோதா
பகலும் மிரவுமுன்னைப் பாடிப் புகழ்வேன்நாதா. வ.



இராகம் கல்யாணி தாளம் சாபபு.

பல்லவி.

கோபுர தரிசனமே நான் செய்த
கோது விமோசன மே.

அநுபல்லவி.

பாப ராசிகளெல்லாம பருதிமுன் பனிபாக
ஸ்ரீபதி சந்நிதி சேர அகலச்செய்யும். கோ.

சரணம்.

1

சிந்து நதியில் உள்ள திருப்பாக்கடல்
சிறந்தநற படித்துறை யில்
அநதரங கசுததியாய் அமிழ்ந்துநீ ராடியே
வந்துப் பார்க்கவேநம்பி வசிக்கும கோவிலுக்குள்ள. கோ.

மணியோசைக் காதில்கேட்டு மாதவன் றாட்கள்
மனதிற் பதிநதவண்ணம்
பிணியற்ற மான்போலும் பித்தன்போ லவுமோடி
இணையற்ற குறுஙகுடி சேர்ந்தஙகு நான்கண்ட. கோ.

3

அண்டர்கள் போற்றும்பாதன் அழக நம்பி
அடியார்க ளுளத்தில வாஸன்
பண்டுசெய் தீவினைப் பயன்களை யகற்றிநம்
பாடுவா னுக்கன்பாய் பரந்தாம னைக்காட்டும். கோ.

விருத்தம்.

நம்பாடு வான்போழக நமபியை நாடிப்பார்கக
எம்பிரான் முன்செங்கெருடன் எழிலதா வுயர்நதுநிறக
வெம்பியே மனதிலேங்கி வேதஙகள் புகழுமதேவே
வம்பதாய்ப் புள்ளொன்றிஙகே வழிமறித் திடுதென்பானே.

இராகம் ஆனந்தபைரவி தாளம் சாப்பு

பல்லவி.

பரந்தாமன் றிருக்காக்ஷி பாராகக யிடையூறயென்
பாபம தடுப்பது போல.

அநு பல்லவி.

பருந்தொன்று குருக்கிட்டு பக்ஷங்க ளைவிரிதரு
கருந்துள பம்பியின் நடையில நின்றுகொண்டதே. ப.

சரணம.

1

அவனியெல் லாம்சுற்றி அழகநம பியைக்காண
ஆவலகொண் டோடி வந்தேன்
புவன பயங்கரனும் புல்லரக் கன்விட்டும்
இவனுரோ நடுவினில் இடைஞ்சல செய்கிறானோயோ. ப

2

முன்செய்த தீவினை முதுகழு காகியென்
முன்வந்து தோன்றிய தோ
என்செய்வேன் ஜெகதீசா ஏதும்நா னறியேனே
உன்செய்கை யோவேறோ உண்மைநீ யுணராயோ. ப.

3

பறையன் ஆனதினால்நான் பக்கத்தி லணுகாதுன்
பாதத தாமரை யெனக்கு
தெரியும் படியாயிந்தத் தோடி யில்நின்றாலும்
இறையவா பரவைசெய் இடரகற்றியாட் கொள்வாய். ப.

விருத்தம்.

பக்தன்நம் பாடுவானும் பாற்கடல் சயனன்பாதம்
வெக்தமாய்க் காணபதற்கு விக்னமாய்க கெருடனுங்க
முகதியை யளிக்கும்வேத முதல்வன்பாற் றுதிகள்சாற்ற
பக்தவத் ஸலனுமன்பாய்ப் பருந்தினை குறுகச்செய்தான்.

சக்க சக்க கபமகரீ கமபாமகரிச ரீசநிசா என்ற வர்ணமெட்டு,

கோட்டு.

இராகம் சங்கராபரணம் தாளம் ஆதி.

1.

குறுகியிருப்பாய் கெருடாநீ குணமிகும்நம்பா வென்வந்தான்
நெறிமுறை யனுவும வழுவானென்
நெஞ்சம திற்கவ னேஉவநோன. கு.

2.

ஜாதிமுறைகளை சாற்றுகிறான் சரணமடைந்துமன் றாடுகிறான்
நீதி புகனறுபோ ராடுகிறான்
நீதிற் பதைககண்டு வாடுகிறான். கு.

3.

மூர்த்திகள்நான்கையு மளிப்பேனென் மூலஸ்தானத் தையுமீவேன்
சகதியை வேண்டிடி னும்சலியேனெனை
சாாநதவா மனக்குறை யைப்பொறுக்கேன். கு.

விருத்தம்.

1.

கெருடனைக் குறுகச்செய்தும் கேதாத்ரி குலிசனானேன்
அருடனை யுளதநிற்பூண்டு ஆலயத் துள்ளிலோங்கும்
உரியஸ்ரீ பலிபீடததோ டுன்னத த்வஜததையும்தான்
சரியதாய் வடகொதுங்கிச் சாாந்திருக் கச்செய்தானே.

2.

இவவித மழகநம்பி இதயததிற் பொன்போங்கி
பயயனும் பாடுவானதன் பகரொனுக சாக்ஷிதன்னை
செயவையாய்ப் பாாததுபகதி செழிததுளம மகிழ்வதற்காய்
திவவிய சேவையிந்தத திருவருள புரிநதிட்டானே.

3.

கெருடனும் குறுகிநிற்கக் கேதஙக ளகன்றுபக்தன்
இருடிகள் துதிககுமதேவ னிணையடிக கமலந்தன்னை
வருடிடு மூபயநாச்சாா வலமிடத தினிலுமோங்க
அருடனைக் கோரிநிர்தத மானந்த மாயச்செய்தானே.

எந்நேரமும் தன் சிந்நிதிதன்னிலே என்ற வர்ணமெட்டு.

இராகம் ஆரபி தாளம் ஆதி.

பல்லவி.

ஆடினன் நம்பாடுவான் அழகநம் பியைப்போற்றி
ஆனந்தத் திருக் கூத் து.

அநு பல்லவி.

பாடிக்கை சிகராகப் பண்களால் கானம்செய்து
நாடும்பே ரின்புத்தை நானின் றடைந்தேனென்று. ஆ.

சரணம்.

1.

அண்டங்கள் யாவற்றிலும் அகில சராசரத்தும்
அமர்ந்தோங்கும் ஸ்ரீஹரி யே
தொண்டாக ருள்ளத்திலும் தோன்றும் துளபமாலே
தோயஜாக்ஷனே ததிங் கிணதோம் ததிங் கிணதோமென்று, ஆ.

2.

ஆரண மாகமங்க ளாதிபுகழ் தேவனே
அணுமேரு நிறைந்தவ னே
காரணம் உன்னையன்றி காணேன் சுந்தரபரி
பூரண னேயென்னை புனிதனு க்கசெயயென்று. ஆ.

3.

தசவித ரூபனே தைத்யகு லாந்தகனே
தசக்ரீவ சிரோ ஹரனே
ஸசிமுகி யாமசோதை பாலனே பசுமேய்த்த
ஸாரஸ நாபனே சரணம் சரணமென்று. ஆ.



அக்ஷய லிங்கவிபோ என்ற வர்ணமெட்டு.

இராகம் சங்கராபரணம் தாளம் மிஸ்ர சாப்பு,

பல்லவி.

தரிசனம் செய்தானே நம்பாடுவான்
தரிசனம் செய்தானே.

### அநு பல்லவி.

தரிசனம் செய்தானே தாமரைத் தாளனை
வரிசை வரிசையாக வாழ்த்தித் துதித்துபோற்றி த.

### சரணம்.

### 1.

அங்கம் பரவசமாய் ஆனந்தக் கடலாழ்ந்து
அடிக்கடி ஸ்ரீஹரி அபயம் அபயமென்று
மங்கள நாமனே மாரம ணனெயெந்தன்
மனசங்கை களகற்றி மன்னித் தருள்கூறென்றும்
சங்க சக்கரக் கைய னேயுன்
சரண மேகெதி யென்று பன்முறை
இங்கி தமாய்த்துதி யனந்தம் சாற்றியே
ஈசனே ரிஷி கேச னென்று த,

### 2.

உலகபந் தத்திற்பட்டு உன்சேவை களைவிட்டு
உண்மையை யுணராமல் உன்மத்த னாகினேன்
அலைகட லிற்றுயிலும ஆதிநா ராயணா
அடியேன்பால் க்ருபைகூர்ந்துன் அடியார்க ளில்சேர்த்து
கலுஷ மகற்றியே காத்தி ரக்ஷிக்க
காதத னேயிது தருண மென்றும்
பலக லையும்புகழ் பக்த வத்ஸலா
பாஹி பாஹிமாம பாஹி யென்று. த.

### 3.

நீலமே கவண்ணனே நித்யானந் தமயனே
நிகமகோ சரதேவா நிஷ்கள ஞானவா
ஆலிலை யிற்பள்ளி கொண்டவ னேயென்றும்
அடியார்க ளைக்காக்கும் ஆவல்பூண் டவாஆதி.
மூல மேயெனக் கதறு மானையின்
முன்பு வந்ததன் றுயரைத் தீர்த்தவா
நாலு பதங்களு மளிக்கு மழகிய
நம்பி யுனைநம்பி னேனென் றேற்றி. த.

விருத்தம்.

பாடுவான் நம்பிக்காகவிப் பார்த்தின்ப நோக்கியுள்ளில்
நாடுவான் அரக்கன்பால்தான் நவின்றதோர வாக்கீடேற
பாடுவான் கைசிகத்திற் பற்பல பணகள்நேரய
ஓடுவான் காட்டைநோக்கி ஒப்பாரு மில்லான்தானே.

விருத்தம.

1

நம்பியைப் பணிந்தன்பாக நமபாடு வானுமேக
அம்புதி சயனன்தானோர அந்தண வடிவனாகி
வம்புகள் நிறைந்தவாக்கை வழுத்தியிவ வழியேசென்றால்
வெம்புலி யரக்கரால்மாண் வேணையுண டேகேலெனபான்.

2.

ஆரடா போகின்றாய்நான் அறிந்திடப் புகலுன்பேரைப்
பாரடா உனக்கோர்வார்த்தைப் பகருவேன் பக்ஷமாக
நேரடா நான்சொலவாக்கு நெஞ்சினில வஞ்சமெண்ணேல்
கூறடா வேகமென்று குருககிட்டான் குசுமநாபன்.

பகவானாகிய மாயாமறையோனுக்கும் நம்பாடுவானுக்கும் தருக்கம்.

நாரோருஹம்மது முஸ்தபாமனு ப்யாரிலாகிரே என்றமெட்டு.

இராகம் ஹிந்துஸ்தான் தாளம சாப்பு.

கண்ணிகள்.

1.

செல்லுவ தெங்கேயென் செவியேற்க நல்வார்த்தை
செப்புவாய் நீயென்னிடம் அடேநீ
செப்புவாய் நீயென்னிடம்
வல்லவ ரோநான் வறிஞனோர் பஞ்சமன்
வழியாத்ரை யாய்ச்செல்ப வன்.

2.

இவ்வழி சென்றால் இருள்கானில் சேர்க்கும்
இடருகள் பலதுண்டாகும் உனக்கு
இடருகள் பலதுண்டாகும்
எவ்வழி யேனும் ஏகுவேன் சுவாமி
ஏதுக்கென் னைத்தடுத் தல்.

3.

கானகம் சென்றால காடி புலிகளுண்டு
காணுவா ராகருன்னை சென்றால் காட்டில்
காணுவா ராக்கருன்னை
நானகம வாடேன் நாதாவோர் காரியம்
நான்செல்வேன் நீரேகு மே.

4.

காரிய மென்ன கழருவா யென்பால்
கலங்கிடேல் காதநிடுவேன் மனதில்
கலங்கிடேல் காதநிடுவேன்
வீரியம் பூண்டேன விண்ணகர் புகுவேன்
வீணாய் வாழமாட் டேன்.

5.

உண்டான தைச்சொல் உத்தம னேநில்
உன்மீதி லன்புகொண்டேன் உண்மையாக
உன்மீதி லன்புகொண்டேன்
தண்டாம ரையோன் வரைப்போ லரக்கனுக்
கிரையாக நானபோகின் றேன்.



## விருத்தம்.

அரக்கனுக் குரைத்தவாராய் அங்கவன் பசித்திருப்பான்
சுருக்கினிற் செல்லவேண்டும் சூதல்ல யிதுமெய்யென்ன
சிரக்கம்ப னங்கள்செய்து சேர்த்திரு கரமும்கொட்டி
இரக்கமாய் வழிமறித்து ஈசனும் தடுத்திட்டானே:



## விருத்தம்.

எட்டியே நிற்கவேண்டும் ஏழைநான் புலையனுண்டே
சட்டமு மூரைக்குதையர் சண்டாளர் விலகவென்று
இட்டமாய் வந்தெனக்கு இதமியம் பிடவுமேயித்
துட்டன்செய் தவங்கள்தானோ தூய்யனே போற்றிபோற்றி.

## மாயமறையோனுக்கும் நம்பாடுவானுக்கும் தருக்கம்.

ஓரடிவைத்து மற்றோரடி வைத்திட என்ற வாணமெட்டு,

இராகம் சாவேரி தாளம ஆதி.

### கண்ணிகள்.

1.

அடியேனை யணுகிடல் அறமன்று ஆண்டோநான்
அவனியில் புலையனேயே ஐயேகேளும
விடமும் நீராயப்போகும் வேதியர் குறையென்று
விதிகளி லுரைத்திடு தே ஐயே. (அடியேனை).

2

உலகவியா பாரங்கள் உயர்வுதாழ் வென்பது
உண்மையொன் றல்லவோடா அடாஅடா
கலைகளி லுரைப்பதும் காண்பதெல்லா மீசன
காரணம் தானல்ல வோ டா. (உலக).

3.

காரண மாகிலும் காசினி யின்முறைப்போல்
கடையான சண்டாளன்நான் உண்மையாக
ஆரண மோதிடும் ஐயரே அடியேனை
ஐய்யோ கெடுத்திடா தீ (காரண).

4.

கெடுக்கவுந் தவனல்ல கேளடா யென்வாக்கை
கேலியென் றெண்ணவேண்டாம் அடே யறையா
இடுக்கங்கள் நேர்ந்திடும் இவ்வழி நீயேக
இதயத்திற் றுணிவுகொள் ளே ன் நான் (கெடுக்க).

5.

மார்பில் மூப்புரிநூலும் மறையோதும் முககாந்தி
மலரோனைத் தோன்றுதையே உம்மைப்பார்க்க
கார்மேக வண்ணன்மூத் திரையங்கத் தணிந்தவா
கடையேனகன்றுச் செல்லு வே ன். ஐயா (மார்பில்).

விருத்தம்.

மாதவ ஞானமாயா மறையவ னுரைப்பதெல்லாம்
நீதுக ளகற்றுமென்றுள் நினைமா யுணர்ந்தும்தான்முன்
ஓதிய வாக்கைப்போக்க ஒருக்காலு மெண்ணுறை
வேதியன் தானுமாக வேண்டிய தியம்புவாரே.

இராகம முகாரி தாளம் மிஸ்ர சாபு.

தர்க்கம் கண்ணிகள்.

1.

ஆதிகுலத் தினரோ இந்த
அடியேனை விடுமை யா
பாதகம நான்செய்யேன் அரக்கன்
பசிதிருப் பானே யா.

2.

பசித்திருப் பானென்று நீசெய் கின்ற
பாசாங்கு கள்விந தை
பசுக்களைத தின்பவனே நானுந்தன்
பண்பறி வேனபறை யா.

3.

பறையனென்பது உண்மைதான் நான்முன்பு
பசர்ந்தச்சொல் லைத்தவ றேன்
ஹரிதின மாயுரைக்கும் ஏகாதசி
அரியநற் பலனிழக் கேன்.

4

பறையாக் கேகாதசியோ விந்தையிந்தப்
பாரிலெநான் கேட்டறி யேன்
அரியகோ வதைசெய்துண் ணும் சண்டாளா
அறையேல்வீண் வாக்கினி மேல்.

5.

வீண்வார்த்தை யல்லவையா நான்சொல்வது
விஷ்ணுவின் பாதத் தாணை
சாணவயிற் றைவளர்க்கும் இப்புவிவாட்கை
சாஸ்வத மென்றெண்ணே னே.

காட்டிற் கேகியங்கு கண்டு—காய் கனிகிழங்குவகை கொண்டு
என்ற வர்ணமெட்டு.

லாவணி.

1.

நாராய ணனைமற வேனே————என்றும்
நான் மறை நெறியைவழு வேனே
சோராமல் பஜனைசெய் வேனே
சொல்வாக்கழியேனே——சோரவுமெய்கிடேனே
சோபையாய் விளங்கிடு வேனே ஸ்ரீமந்.

2

பஞ்சபூ தாக்யச ரீரம்————ஐயா
பார்த் துணர்ந்தா லிதுமிக கோரம்
அஞ்சும்மூன றெழுதகே தீரம
அதுவேமூலாதாரம்——அறிவதுதான்ஸாரம்
அறியா தவன்புவி பாரம. ஸ்ரீமந்.

3.

தந்தை தாயும்சத மல்ல————உன்
தனை யர்க ளாதிசத மல்ல
உந்தன் வாழ்வும்சத மல்ல
ஊன்றிப்பார்நீமெலல——உண்டோநிச்சயம்சொல்ல
உலகத் தியல்பும்சத மல்ல. ஸ்ரீமந்.

4.

மானிட வாழ்கைபொல் லாது————ஐயோ
மா ராம லென்றும்நில் லாது
ஞானத்தை மடமைவெல் லாது
நானென்பதுமாண்டீது——நலமடையவிப்போது
நான்முகன் பிதன்புக ழோது. ஸ்ரீமந்.

5.

வான்புவி யாவும்விஷ்ணு மயமாம்————சீராய்
வ ழுத்துதல் வேதஸம் மதமாம்
வான்புகல் வதுஸா தகமாம்
வானிலம்புகழ்திருக்——குறுங்குடியழகிய
நம்பியின் றிருவடி சதமாம். ஸ்ரீமந்.

விருத்தம்.

விடையங்கள் பலதும்சிராய் வேதியன் விண்டும்பக்தன்
திடமன தாகவேநான் திண்ணமாய்ச் செல்வேனென்ன
துடிதுடித் திதழ்களாடத் துளபமா லாம்பூசுரனும்
சடுதியில் முனிவுமீறி சாற்றுவான் தூற்றுவானே.

நியாயம் தானோநீர் சொல்லும் என்ற வர்ணமெட்டு.

இராகம் சங்கராபரணம் தாளம் ஆதி.

பல்லவி.

நியாயம் தானோநீ சொல்வாய்.

அநு பல்லவி.

நீயாரென யெந்தனை நின்மனத் தெண்ணினாய். நி.

சரணம்.

1

உலகத்தி லில்லா வழக்கம்——இது
உதித்ததுன் வல்வினைப் பழக்கம்——எந்தக்
கலையிலும் புகலா வொழுக்கம்——அடர்
கானகம சேர்ப்பித்துன் காயத்தை யொழிக்கும். நி.

2

பறையருக் கேதுஹரி திவசம்——நீ
பகாவதெல் லாம்முழு மோசம்——நந்
நெறிக்கெநதன் சொல்லுப தேசம்——உன்
நெஞ்சம் பதைபதைக்க நேர்ந்திடும் க்லேசம். நி

3.

காட்டின் வழியாய்ச்செல் லாதே——அங்கு
காணும்துர் நிமித்தமபோல் லாதே——உந்தன்
ஆட்டங்கள் அவிடம்செல் லாதே——வரும்
ஆபத்தைப் போக்கவுன் ஆவியும் நில்லாதே. நி.

விருத்தம்.

மறையவ னுகவந்த மாதவன் பாடுவான்பால்
நெறிமுறை யியம்பிப்பார்த்தும் நேர்மலி பக்தன்கொண்ட
உறுதியா லுளமகிழ்ந்து உன்விதி போலாமென்று
மறுமொழி புகலாமல்தான் மாயமா யகன்றிட்டானே.

மறையவ னுரைத்ததெல்லாம் மறுத்துநம் பாடுவான்தான்
விரைவதாய் வருவேனென்று விளம்பிய சத்தியத்தின்
நெறியது போலரக்கன் நேரினி லெய்தியேயுன்
அரியவெம் பசிக்குயெந்தன ஆக்கையைப் புசியென்பானே.

யாதவநீபா யெதுகுலநந்தன—என்ற வர்ணமெட்டு,
இராகம ப்யாக் தாளம் ஆதி.

பல்லவி.

அரக்கசி ரோமணி அடியேனிதோ வந்தேன்

அநு பல்லவி.

இரக்கமில் லாமலென்னை இக்ஷண மேதின்பாய். அ.

சரணம்.

1

அழகநம் பியின்பாதம் ஆனந்த மாய்த்தொழுதேன்
புழுகனெனும்போ கேட்கேன் புசித்திடுவா யென்னை அ.

2

உதிரம் நரம்பெலும்பும் ஊனும்சேர் உடல்நல்ல
கெதிபெறநீ தின்பாய் கேவல மாகாமல். அ.

3

பரஉப காரத்திற்காய் படைத்தான யன்தேகத்தை
சுரர்பதி நான்சேர சுருக்கினி லருந்துவாய். அ

விருத்தம்.

மதிதனில் மரணமென்னும் மாண்பய மின்றியென்னை
கெதிபெறத் தின்பாயென்று கேட்கும்நம் பாடுவான்பால்
அதிதியா மெனக்குநீசெய் அறங்களின் பலன்களீந்தால்
உதாவே தனைபோமென்று உரைத்தன னரக்கன்தானே.

இராகம் நாதநாமக்கிரியை தாளம் சாப்பு.

ஆனந்தக்களிப்பு—கண்ணிகள்.

1.

ஐயனே நீஹரி பத்தன்—உன்னை
அறியாமலமோசம்போ னேனேநான் பித்தன்
மெய்ப்பொரு ளுணர்ஜீவன் முத்தன்—உந்தன்
மேலானகுணத்தைப்பு கழ்வோன்ப்ர சித்தன். ஐ.

2.

உலகினிலரக்கனு யுதித்தேன்—அழியும்
உடலையேநானென்றும் சதமென்று நினைத்தேன்
பலவுயிர் களைக்கொன்று புசித்தேன்—பொல்லா
பாதகங்களனந்தம் பாவிநா னிழைத்தேன். ஐ.

3.

பலிகொள்ளென் றென்னைச்சொல் லாதே—துஷ்ட
பான்மையால் விளைந்திடும் பாவம்பொல் லாதே
கலியும்பக் தரைவெல் லாதே—இந்த
கடைகெட்டோ னூற்றலுன் னிடத்திற்செல்—லாதே. ஐ.

4.

நம்பாடு வாரென்னும் நாதா—அழக
நம்பிவை யெந்நாளும் துதிசெய்வி னோதா
அம்புவி புகழ்ஞான போதா——மூட
அரக்கனு மென்னிடம இன்னமும வாதா. ஐ.

5.

என்மீது நீர்கிருபை கூரும்—நான்செய்
எண்ணில்லா தீவினை யகலக்கண் பாரும்
வன்மமெண் ணுதெனனைக காரும்—இவ
வடியே னுய்யவேபுண்ய பலன்களைத் தாரும். ஐ.

விருத்தம்.

அரக்கனுக் கறிவுதோன்றி அயர்ந்துநம் பாடுவோன்பால்
இரக்கமாய் வணங்கியேபுண் ணியபலன் களைத்தான்வேண்ட
சிரககரம் கூப்பியெந்தன் ஜீவனைத் தருவேனன்றி
விரிக்கொணுப் பலன்களீதல் விதிமுறை யலவென்பானே.

இராகம் சாவேரி தாளம் ஆதி.

பல்லவி.

அரக்கனே நீபூண்ட ஆவல்போ லென்னுடலை
அளிப்பதாய் நான்முன்பு அறைந்ததினைப்பின

அநுபல்லவி.

னிறக்க பயந்துமேபுண ணியபல னீயதென்றால்
சிறகருமோ எந்தன்வாக்கு சீசீயென நிகழாரோ. அ.

சரணம்.

1.

வாக்கைத் தவர்ந்தவர்கள் வானவ ராஞலும்
வாய்ந்த புகழுமகீர்த்தி வாழ்வுக ளாதிகுன்றி
ஆக்கை யழிந்தபின்பு அந்தகன் விதித்திடும்
ஆகினை யாம்நரகம் அநுபவித் திடநேரும்

பாக்கிய வானேயிப் பாவோ னிடபேர்
பார்மிசை விளங்கவுன் பசிகெனைப் புசியாமல்
வாக்கியம் வேறொன்றும் வழுத்தல தகாதென்றில்
வடியவனை நீர் வதைத்துணனு மையா. அ.

2.

மானிட ருக்குத்தகு மானவிஷயம் கேட்பாய்
மனதை யீசன்பாலநாட்டி மாறுமொழியும வாய்ந்து
நானெனு மகந்தையென் னுளுமுள் ளிலகொள்ளாமல்
நல்மன துடனேதம் நிலையுணர்ந் தறமசெய்வோர்

மானிலத் தினில்புகழ் கீர்த்தியும் மலிந்து
மங்கள மாகவே மகிழ்ச்சியாய் வாழ்ந்துபின்
வானவ ராதியரும் வணங்கிப் பணியும்கரி
வரதன் றிருப்பதமு மெய்துவா ரையா. அ.

3.

புண்ணிய வானேயெந்தன் புந்தியில் மகிழ்வோங்க
பூர்ண தயவாயென்னை புசித்துன் பசிதீர்ப்பாய்
மண்ணிலுன் கீர்த்தியென்றும் மலியும் நானும்திரு
மாலின் பதம்பெற்றுய்ய மாண்க்ருபை செயவாயென்றும்

விண்ணவர் புகழே காதசி பலனையும்
விஷ்ணுவைப் புகழ்கை சிகப்பண்கள் பலனையும்
கண்ணிய வானேயுனக் களிப்பதாய் நான்முனம்
கழறவே யிலையென்பால் கருணைகூ ரையா. அ.



## சிதம்பர தரிசனமா என்ற வர்ணமெட்டு.

இராகம் முகாரி தாளம் ஆதி.

### பல்லவி.

ஏகா தசிபலனும் கைசிக பலனும்
என்மனம் தா வேற்கு மோ.

### அநு பல்லவி.

ஏகாக்ர சித்தமாய் எனக்கு முனக்கும்முன்பு
ஏற்பட்ட வாக்கிலணு வேனும்தவறே னையா. ஏ.

### சரணம்.

1.

ஆதியி லுந்தன்பசிக்கு ஏந்தன்தே கத்தை
ஆகார மாக்கிக் கொள்ளென்று
நீதியா யிவ்வெளியேன் நிகழ்த்திய வாக்கதை
நீமறுத் தாலுமென் நினைவுமாறா தையா
கூறாதே வேறு கோறாதே——பசி
ஆறாதே என்னுள் சோராதே. ஏ.

2.

அழகநம் பியின்காக்ஷியை ஆனந்த மாக
அடியேன்கண் டோடி வந்தேன்
புழுகனென் னும்பேரிந்த பூவுல கினில்கேட்கேன்
புண்ணிய வானேயுன்பால் புகன்றவாக் கினில்சற்றும்
வழுவேனே சத்யம் அழியேனே——நரகில்
முழுகேனே உன்னைத் தொழுவேனே. ஏ.

3.

நானிலம் புகழ்குறுங்கை க்ஷேத்திரத் தோங்கும்
நம்பியின் பாத சாக்ஷியாய்
மாநிலம் விண்ணும்கதிர் மதியுள்ள வரையென்பேர்
மாக்ஷிசேர் பாடுவானாய் மலிந்துல கில்விளங்க
துணிந்தேனே உன்னைப் பணிந்தேனே——புகழ்
அணிந்தேனே உள்ளம் கனிந்தேனே. ஏ.

காவடிச சிந்து.

செந்திபாநகர் எனற வர்ணமெட்டு.

தர்க்கம்.

இராகம் செஞ்சுருட்டி தாளம சாபபு.

1.

அரக்கனே உனையுன் அரும்பசிக் காயரைக்
கணத்தில் கொன்றுத் தினறுன் னுளமகிழ்வாய்—என்மே
லிரக்கம்வைத் தெந்தன்சொல் லுககுவப்பாய—யோ
பொருக்கே னென்மொழி தவறிப் போனால்
சிரிக்கு மூலகெலாம சீச்சீ யென்றிடும். அ.

2.

உன்னைக் கொன்றுத்தின் றுப்பிழைப் பேனோஞன்
உததம னோரா ணன்பகதனே————எனக
கன்னைதந் தைகுரு வானவனே——ஐயா
என்னி டத்தினில கருணைகூர்ந துயர்
பன்ன லப்புண்ய பலன்க ளளிப்பாய். உ.

3.

ஆதியில் உன்கை லகப்பட்ட போதெந்தன்
ஆக்கையை யுன்பசிக் களிப்பதாகச்——சொன்ன
போதிந்த வாக்கைநீ புகலவில்லை——ஐயா
மேதி னியின்பொல்லா வாழ்வை மதிக்கேன்
மரத வன்பத மலரை மறககேன். ங.

4.

முன்னாளில் செய்த தீவினை யாலிந்த
மூட வாக்கச் சென்மம் எடுத்தேன்——பாவி
இன்னாளில் நல்வழி யைவிடுத்தேன்——ஐயா
இன்ன மாகிலும் ஈசன் விஷ்ணுவின்
உன்ன தப்பத மண்டைய வருள்புரி. ச.

5.

ஐயனே யென்னால் ஆகாத செய்கையை
அறைவதி னால்பயன் ஆவதுணடோ——என்னைப்
பொய்யனென் றால்மனம் பதருமையா——நானும்
கையைக் கூப்பியுன் கழல்ப ணிந்தேனெனை
ஐய யின்வாம லருந்து மையா. ரு.

### விருத்தம்.

இந்தமாண் வாக்குவாதம் இருவாசெய் திருக்கும்போது
சுந்தர பரிபூரணன்பூ சுரவடி யெடுத்தங்கெய்தி
எந்தகா ரணத்தையுள்ளில் எற்றுழல் கின்றீரதனை
எநதன்பா லியம்புவீரேல் எளிதில்தீர்ப் பேனென்றானே.

இராகம சாவேரி தாளம் ஆதி.

### பல்லவி.

அரக்கனும் பாடுவானும் அகம்கசிந் துருகியே
அவாசெய்யும வழக்கைத் தீர்க்க.

### அநு பல்லவி.

விரிக்கொணு மஹிமைசேர் விஷ்ணுவாம் நம்பிசதா
வரிக்கும் கெருடனின்றி வந்தான் வேதியவடிவாய். அ.

### சரணம.

1.

வநதஸ்ரீ மாதவன் வாதாடும் இருவரின்
வாயமொழிக கேட்டும்பல வகையில் பரிகசித்தும்தன்
சிநதையி லனபுகூர்நது சிறந்தசா யுஜ்ஜியமும்
தநதிட வேகருணை தான்பூண் டறையலானான். அ.

2.

ஆரடா நீவிருவா அடாவழக் கிடும்சேதி
அனைத்தையும் உண்மையாக அறைந்தா லுடனேதீர்ப்பேன்
போரிட வேண்டாமுங்கள் பொருட்டாக வேவந்தேன்
நேரடா வென்றன்பாக நெடியோன்பு கன்றிட்டானும். அ.

3.

மறையவ னுரைகேட்டு மகிழ்ந்தாம் பர்டுவானும்
மனதில் மிகுந்ததுயர் மேவிய அரக்கனும்
பெருமை மிகப்படைத்த பெரியவ ரேயென்றேற்றி
பெட்புடன் தாங்கள்பூண்ட போரவா வைச்சொல்வாராம். அ.

விருத்தம்.

வேதியன் றனையரக்கன் வேண்டியிம் மேலோன்செய்யும்
நீதிசே ரேகாதசியின் நிகழ்த்தொணுப் பலனேடென்றும
தீதா ஹரியைப்பாடும் திவயகை சிகப்பண்பலனும்
மாதவா தரச்செய்தாலென் மனமகிழ்ந் திடுமென்றானே.

மறையவ னடியைப்போற்றி மாசுசேர் பாடுவானும்
இறையவா இவ்வரக்கன் இயம்பிடும் சொல்தகாது
பறையனும் அடியேன்முன்புன் பசிக்கெனைப் புசிப்பாயென்று
உறுதியாய்ப் புகன்றேனன்றி உரைத்திலேன் வேறென்றானே.

அடிபணிந் திரண்டுபேரும் அறைவதைக் கேட்டுமகருள்
திடமதும் பரிசோதித்துத திருமாலா மழகநம்பி
உடனவர் முன்செய்வினையும் உணாநல் லருள்புரிந்தும்
உடையவன் கூணத்தில்கெருடா ரூடனாய் விளங்கினானே.

இராகம் சஹானா தாளம் சாப்பு.

பல்லவி.

தரிசனம் ஈந்தானே தயைகூர்ந் தழகநம்பி
தரிசனம் ஈந்தானே.

அநு பல்லவி.

தரிசனம் ஈந்தானே தனதிரு அடியாற்கும்
வரிசை வரிசையாக வானோர்க ளடர்ந்தேற்ற. த.

சரணம்.

1.

நாரதர் யாழேந்தி பாடவும் தும்புரு
நன்மிரு தங்கம முழக்க
நோரதா யப்ஸர பெண்கள் நாட்டியமாட
நேர்மையாய் அயனிந்த்ரன் நீலகண் டனும்சூழ. த.

2.

கெருடா ரூடனாயும் கௌத்துவ பீதாம்பரமும்
கௌமோ தகியு மணிந்து
இருகையில் பாஞ்சஜன் னியமும்ஸு தர்ஸனமும்
இணையற்ற ஸாரங்கமும் இலகும்நந் தகமேந்தி. த.

ஸ்ரீபதி தன்சேவை ஸ்ரீபூமி நீளையுடன்
ஸ்ரீகர மாய் ஸாதிததும்
பாப ரஹிதராகதி பக்தாக ளின்மனஸ்
தாபங்க ளைத்தீர்த்தும் தன்பதம் அருளவே. த.



ஸோமசர்மாவென்னும் மறையவனாகிய ப்ரம்மராக்கதனும்
சுகுணவானென்னும் மகாராஜனாகிய நமபாடுவானும்
தங்களிடத் தன்புகூர்ந்துத் திருக்காக்ஷி யளித்தாட்கொண்ட

## ஸ்ரீ சுந்தரபரிபூரண சுவாமியைத் துதிப்பது.



நாதபிந்து கலாதி நமோ நமோ என்ற வர்ணமெட்டு.



பாஹி அழகிய நம்பி நமோநமோ
பகத வதஸல சுவாமி நமோநமோ
பாஹி சுந்தர பரிபூர் ணனெபக்ஷி
பாகா நமோ.

ஆஹி பூஷண னயனுமிந் திரனும்
அண்ட ராதிய ருமபணிந் தேற்றிடும்
ஆஹி சயனஸ்ரீ அம்புஜ நாபனே
ஐயா நமோ.

தேஹி ஆரண மூலாந மோநமோ
தென்கு றுங்குடி வாஸாந மோநமோ
தேஹி தீனத யாளா திருவுறையும்
தேகா நமோ.

பாஹிமாம் வில்சங்க சக்ரம்ஸா ரங்கம்கதை
பதும முமதரித் தும்அப யவரத
பாஹிமாம் வாயோகி யெங்களை யாட்கொண்ட
பரனே நமோ. பா.

மலுடிவயிற்று மகன்போலே என்ற வர்ணமெட்டு.



கனகபீ தாம்பர தாகரு ணலய
காாமுகில வணணமெகரு டாருடா
கமலைம ஞோறரா காமித தாயக
கம லா க்ஷா.

ஸனகஸ நந்தன ஞாநிய ரும்துதி
சாற்றிப் புகழுமஸஜ் ஜனபோஷக
ஸரஸிஜ நாபஸ்ரீ ஸதவகு ணதமக
ஸா வே சா

இனகுல ராமனும் யெதுகுல கிருஷ்ணனுய்
இங்கிலத தினிலுறை மாந்தருககு
இகபர ஸாதக மடையும் நெறிவிதித்த
இறை யோ னே.

தினகர கோடிதே ஜோமய வடிவனே
திருக்குறுங குடியில்வ ளாபவனே
திருவுளம் கூர்ந்தமெ யெங்களை யாட்கொண்ட
திரு மா லே.



மருவே செறித்த குழலாள் என்ற வர்ணமெட்டு.



கருணா காப்பேர் தவரு மலுந்தன்
கழலேற் றிபோற்று மடியாாககு
கலுஷங் களென்றும புவிமீ தாருமல
காப்பாற் றியோஙகும் கமலாக்ஷா.

வருணா லயத்தை மதனம் செயவித்து
வருவித ததிவய அமுதத்தை
வானோர் களுக்கு களுவா யளிதத
வனஜாட் சனுந்தன் கழல்போற்றி.

ஹரிணாட் சியர்க ளாம்கோ பிமாரின்
அகத்துட் புகுந்து மறைவாக
அழகா கவெண்ணெய் தயிர்பால் கலந்து
அன்பர்க் குமிந்து உண்டோனே.

சரணும் புரோரு ஏழைமைகைப் பணிந்து
சாற்றம் கொண்ணுத நின்காக்ஷி
சரியா ககணமுன் களித்தோம குறுங்கை
சாக்ஷாத கரித்த சர்வேசா. க.

வங்கார மார்பிலணி என்ற வர்ணமெட்டு.

ஜலஜாக்ஷ ரிஷிகேசா ஜலதிசய னஸ்ரீசா
ஜெகங்களீ ரேழைப்பரி பாலிக்கும் சாவேசா
ஜென்மஸாரத தக்கமாகவே அடியாரை யாண்டருளும்
ஜெக தீ சா.

பலவாணு கியபலியால பாகசா தனையர்க்குன்
பாதமே கதியென்று சரணபுகுந்தி டவேதேற்றி
பார்க்கசிறு வாமனனாய் மூன்றடிமண் யாசித்திட
பாச மீ தில.

மலைபோல வேவளர்ந்து மாபலியின் முடிமீதுன்
மலர்பாதம வைத்தழுத்தி மண்ணுலகின் கீழ்சேர்த்து
மாக்ஷிமிகும புரந்தரனுள மகிழ்வெய்த வேகாத்த
மறை மூ லா.

பலவாராயத துதிகதேற்றும் பலியின்வேண் டலுக்குவந்து
பாரிலதிருக் குறுங்குடியி லேகுதானும் பியாய்க்காக்ஷி
பரிவுடனே யளித்தோங்கும பாத்துவனே ஸ்ரீசுந்தர
பரி பூர ணா. ௨.

தொந்தி சரிய என்ற வர்ணமெட்டு.

அழக கம்பீராயா உனதுதிரு
அருளுக்கு நிகருண்டோ அவனிமிசை
அடிமையா மெங்களுக்கு அரியகாக்ஷி
அளித் தோ னே.

பழவி னைகள்போக்கி பரிவுடனே
பக்தரை யாழ்பவனே ஸ்ரீசனே
பரமனு மஜனிந்திர ரூதியரும்
பணி பா தா.

பழியும் பாதகங்கள் செய்துழன்ற
பதிதனு மஜாமிளனுன நாமங்கூற
பரம பதத்தையன்பா யீந்தாட்கொண்ட
பரந் தா மா

எழில்மி கும்குறுங்கை பதிவிளங்கி
எங்குமவ்யாபி யாயும றைகாகளீ
ரேழைக் காத்துவோங்கும் அன்பருக்
கெளி யோ னே அ.



பாதிமதிநதி போதுமணிஜடை நாதனருளிய குமரேசா
என்ற வர்ணமெட்டு.



சுந்த ரபரி பூர்ணத யாகர
சுபங்க ளருளுமகரு ணாகரனே
சுத்தஸாத வீகமு மெய்ப்பொரு ளாகியும்
சுஜனாக ளேற்றிடும சுசரித்ரா.

பந்த பாசங்க ளென்று மணுகிடாமல
பாமிசை யன்பரைக் காப்பவனே
பாற்க டலசய னுபார மேஷ்டியை
பண்புட னருளிய பரந்தாமா.

இந்தி ரையைத்திரு மார்பினி லேற்றவா
இருநான் கெழுத்துக் குடையோனே
ஈச னேரிஷி கேசகோ விந்தனே
ஈரைந் தவதார மெடுத்தோனே.

செந்தி ருவுறையும் செழித்தக் குறுங்குடியில
செல்வமா யோங்கிவ ளர்பவனே
செவ்வை யாகவே யெங்களை யாட்கொண்ட
சேஷசயனஸ்ரீ ஜெகதீசா. அ.

சரணகம லாலயத்தில் என்ற வர்ணமெட்டு.

வடிவழக நம்பிரா யனெயுந்தன் றிருக்காக்ஷி
வண்மைதனைப் புகலவிப் புவிமீது
வல்லவர்க ளுளம்முளரோ வாரிதியி னிற்றுயிலும்
வார்ணரெட் சகனெஸ்ரீ வன ஜா

புடவியின் னாதிபதி னன்குபுவ னங்களையும்
புகழ்மேவும் திருவுதரத் தினில்வைகது
புவிலயனும் கரிஹரனும் புரந்தரனும் தொழுதேற்ற
புதுமையாய்க் காக்கும்புஷ் கர ஞ பா.

வடிவிலகும் சங்கம்சக் கரமும்ஸா ரங்கம்கதை
வரியநதபது மதனுடனே வாளேநதி
வனதுளவ மாலைபீ தாம்பரமும் கௌஸ்துவம்ஸ்ரீ
வத்ஸமரு வுமபூண்ட வல் லவ னே.

அடவிதனி லெங்கள்பா லன்புகூர்ந் தாட்கொண்ட
ஆதிமூ லப்பொருளே அகிலேசா
அவனிமிசை குறுங்குடியி லேந்துவடி வாயோங்கும்
ஐயஸ்ரீ சுந்தர பரி பூர ண. வ.

கருப்பத்தூரிப் பிறவாதே கனகப் பாடுற்றுழலாதே என்ற
வர்ணமெட்டு.

ஸ்ரீசுந் தரபரி பூர்ணேசா சின்மயவடிவனே பவநாசா
ஸ்ரீகர னேயடி யாரநேசா ஸ்ரீமகாலெக்ஷுமியின் பராணேசா.
வாசவ னரனயன் பணிபாதா வணமைசே ஸதவகு ணவினோதா
வனஜனுக் காரண குருநாதா வாரண பாலனே ஜெகஞ தா.
ஸாசிர நாமனே ஸர்வேசா ஸாவவி யாபக லோகேசா
ஸனகஸ னாதியா மனவாசா ஸாவிஜநாபனே ரிஷிகேசா.
குஸுமசரன்பிதனே குணபூரண குறித்தவிடத்திலெங்கும பரிபூரண
குடில மகற்றியெங் களையாண்ட குறுங்குடி யுறைமர கதவாண. ஸ்ரீ.

சிறந்தவரும் கரியுரிபோர்வையும் என்ற வர்ணமெட்டு.

சிறந்த நூபுரம் பாடகத் தொலிமலி சீர் பா தா—ஐயா
சீர்மி குந்தபீ தாம்பரத் தையுடுத்த ஸ்ரீ நா தா.
பறந்த மார்பினில் கனகமுந் நூலும்பங் கஜ சே யும்—ஐயா
பண்பு கழ்ந்திடும் கௌஸ்துவ மணியணிந் துள நா தா.
நிறுத்து வவமபூண யெர்திருக கரஙகளி லெழில் மே வும்—ஐயா
சுந்தும் ஸுதர்ஸன மாதியு மேற்றகு ணவி னோ தா.

செறிந்த குழலகுறங் கைவல்லி ஸ்ரீபூமி நீளா வும்—ஐயா
சோத துணைபபுடை சூழ்ந்தில குமருறுவ குடி கா தா. சி.

விருத்தம்.

இவவித மிரண்டுபேருக் கினியநற் காக்ஷியீந்தும்
ஒவவொரு வாசுளுாளில ஓர்கிமுன் செயதீவினையை
செவவையா யவரேயுணரச செயதவா ஜென்மமபோக்கி
அவவிரு வற்குமமுகந்தி அன்புகூாந தளிததிட்டாமே

மூங்கி முழுதுகிற பெண ணெபெணகிகொரு என்றவர்ணமெட்டு

இராகம தனயாசி தாளம ஆதி.

பலலவி.

சாயுஜ்ய மடைந்தாாநம் பாடுவாளும் அரக்கன்
சாவோதத மனோ சேவிதது

அநு பலலவி.

மாயபா சஙகளாதி மனனுல கினபநததை
காயஜ னையனிட கருணையால ஜெயிததோஙகி. சா.

சரணம.

1

கரியமால் தரிசனம கணனுள் குளிரப்பாாத்து
காம வினையை ஒழிதது
ஒரியாம அடிகமப் பிறதிருக தாட்பணிநது
ஓரிஓரி யெமனுலகுந செயலை மனமகனிநது. சா.

2

நீலமேக ஸ்யாமள வண்ணன புகழைப்பாடி
நிலையான பததனை நாடி
பாலும்நீ ருமபோல பகதர்கள ஒருமிதது
நாளும ஆறுருபனே நாததமும் பதது நிததூ. சா.

3

தேவர்கள் கற்பக மலாமழை வருஷிகக
தேவதுந் துபி யொலிக்க
பூவுல குமவிண்ணுமஸம பூரணமாய செழிக்கவும்
பூசுர வேங்கட ராயன்சொல சிறக்கவும. சா.



## விருத்தம்.

1

முற்பகல் செய்தவேள்வி முடிவுறா தழிந்தகோதால
பற்பல கலையுணர்ந்த பாரபபன னரசகனும்
அற்பசண டாளனாக அரசனும சுராவிகிதத
கற்பனை போலுதித்தக காலமும் கழித்திட்டாரே.

2

மூற்பக விழைத்தவினையால முதுமறை யோனுமவேந்தன்
உற்பவ மாகியையத் தழுனறும தம மலலைபோககி
கற்பக நாட்டினகோவும கஞ்சனும் பவனுமபோற்றும்
ஸற்பச யனன்போன்பால ஸாயுஜ்ய மெயதினரே

## மங்களம்.

ஆதிமூல மானதேவ—என்ற வர்ணமெட்டு.

இராகம் ஹிந்துஸ்தான்கோடி தாளம் தருஸர ஏகம்.

பல்லவி.

மஙகளம் மஙகளம ஜெய மஙகளம

அநுபல்லவி.

அஙகஜபித அமரசேவித ஆரக்ஷி பூரதகதா
மஙகளகர மநதரதர மாம ஞேறரா
சங—க—சக—ர
சஙகசக்ர பாணியுனக்கு சாவமஙகளம ம.

சரணம்.

1

மச்ச கூர்ம வராஹநார சிஙகவாமனா
மானி லததில இனகுலத திறைவாமாதகனா
பசசைமேனி பவளவதன பகதபாலனே
அச்—சு—த—னே
அச்சுதனே உனது திருவ டிககுமங்களம். ம.

2

தாசரதி புத்த கிருஷ்ண கல்கியானவா
தாஸ போஷ வாஸுதேவ தானவாந்தகா
ஸ்ரீசனேஸ்ரீனி வாஸனேரிஷி கேசஜெகதீசா
பா—ச—பந்—த
பாசபந்த மோசனுவு னக்குமங்களம்.

3

அம்புவிப்பு கழ்குறுங்கை பதியி லோங்கும்ஸ்ரீ
அழக நம்பி யெநம்பாடு வாரைக்காததவா
உமபர்கோன்முறை கேட்டுவந்தவா உலகளந்தவா
அம்—பு—ஜா—க்ஷ
அம்புஜாக்ஷ வெங்கட்ராய னகததுளமர்ந்தவா. ம.1

## வாழி விருத்தம்.

வாழிஸ்ரீ அழகநம்பி வரமருள் குறுங்கைவல்லி
வாழிநான் மறைபுராணம் வானவா முனிவோர்மாந்தர்
வாழிதென் குறுஙகைதன்னில வளர்ஜீயா மடமுமோஙகி
வாழிவேங கடராயன்சொல வளமலிந தலகிலவாழி,

சுபம்! சுபம்!! சுபம!!!

# நம்பாடுவார் சரித்திரம் முற்றிற்று.

